# அஹ்மத் ஸயீத் சாஹிப்
# வஸிய்யத் லா
# சென்னை, 1938

Record no. 80822

*Ahmat Sayīt Cāhip*

*Vasiyyat lā*

*Ceṉṉai, 1938*

Record no. 80822

Bibliographic Record Target

*அஹ்மத் ஸயீத் சாஹிப்.*
*வஸிய்யத் லா. -- 2. பதிப்பு. -- சென்னை : ஸைபுல் இஸ்லாம் அச்சுக்கூடம், 1938.*
*iii, 24 p. ; 17 cm.*
*Record no. 80822*

*Ahmat Sayīt Cāhip.*
*Vasiyyat lā. -- 2. patippu. -- Ceṉṉai : Saipul Islām Accukkūṭam, 1938.*
*iii, 24 p. ; 17 cm.*
*Record no. 80822*













பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

# வஸிய்யத்

126

சென்னை "ஸைபுல் இஸ்லாம்" பத்திராசிரியர்
ஜனாப் மௌலானா மௌலவி அஹமது ஸயீது ஸாஹிப்
அவர்களால் இயற்றப்பட்டது

(இரண்டாம் பதிப்பு)

341 le:

"ஸைபுல் இஸ்லாம்" அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது

காப்பி ரைட் ] 1938 [ விலை அணா 4.

# "ஸைபுல் இஸ்லாம்"

சென்னையில் பிரசுரமாகும் "ஸைபுல் இஸ்லாம்" பத்திரிகையை தமிழ் தெரிந்த ஒவ்வொரு முஸ்லிமும் ஆதரிக்கவேண்டியது அவர்களின் மார்க்கக் கடமை எனக் கூறுவது பொருந்தும். ஏனெனில், இப்போது கிறி... வர்களும், ஆரியர்களும், இந்துக்களும் இஸ்லாம் மார்க்கத்தின் மீதும், முஸ்லிம் சமூகத்தின் மீதும், இஸ்லாம் அ... சாங்கங்களின் மீதும் அளவுக் கதிகமான பலவிதக் குறைகளையும் வீண் பழிகளையும் சுமத்தி அவர்களின் பத்திரி... களில் எழுதி வருகிறார்கள் என்பது வெளிப்படை அ... களுக்கு முஸ்லிம் சமூகப் பிரதிநிதியாக முன்னின்று ஆதாரங்களுடன் கண்டனம் செய்து சமாதானம் கூ... "ஸைபுல் இஸ்லாம்" ஒன்றே.

முஸ்லிம் சமூக லௌகீக வைதீக சீர்திருத்தங்க... க்கு அரிய பெரிய முயற்சி எடுத்து வருவதும், ... சமூகத்திற்கு நன்மார்க்க உணர்ச்சியை உண்டு... சன்மார்க்க போதனையைச் செய்து வருவதும் ... இஸ்லாம்" ஒன்றே என்பது முஸ்லிம் உலகம் ... விஷயம். ஆதலால், முஸ்லிம் சகோதரர்களே ... இஸ்லாம்" பத்திரிகையை ஆதரியுங்கள்.







பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்



# வஸிய்யத் லா

---

சென்னை "ஸைபுல் இஸ்லாம்" பத்திராசிரியர்

றப் மௌலானா மௌலவி அஹமது ஸயீது சாஹிப்

அவர்களால் இயற்றப்பட்டது

(இரண்டாம் பதிப்பு)

---

புல் இஸ்லாம்" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

] 1938 [ விலை அணா 4

# முகவுரை

நெடிய கடல் சூழ்ந்த இப்பூலகின்கண் மானிட வர்க்கந் தோன்றிய தெல்லாம், வல்ல இறைவனை யறிந்து அவனாலருளப்பட்ட முத்தி தரும் சன்மார்க்கத்தைக் கைக்கொண்டு அதன் கட்டளைப் பிரகாரம் நடந்து சா[illegible]மான மறுமையில் நற்பதவிகளை யடைவதற்குரிய ந[illegible]காரியங்களையும் வணக்கங்களையுஞ் செய்வதற்கே யொழிய வேறில்லை யென்பது எமது இஸ்லாம் மார்க்கச் சித்தாந்தமாகும்.

ஆனதால், இப்பொய்யுலக வாழ்க்கையை வெறுத்து மறுமையின் முத்தி மோக்ஷத்தை விரும்பி நற் காரியங்களையும் வணக்கங்களையும் செய்து வருவதில், தம் வாழ்நாட்களை கழிக்கிறவர்களே புத்திமான்களெனவும், அஞ்ஞானமின்றி இப்பொய்யுலகை நம்பி ஆசாபாசங்களில்மூழ்கி ஆடம்பரமான சுகானுபவங்களை கைக் கொண்டு மறுமையை மறந்து அவ்வுலகிற்குரிய நற்காரியங்களைச் செய்யாது தமது வாழ் நாட்களை வீணுட்களாக கழிக்கிறவர்கள் கோடானு கோடி ஐஸ்வரியங்களை தேடியவர்களா யிருப்பினும் மகிபதியான மன்னர்கள் ராஜ்ய சேகரத்தை தேடியவர்களா யிருப்பினும் அவர்களை நிர்மூடர்களென்றே எம் இஸ்லாம் மார்க்கம் கட்டளை யிடுகிறது.

உண்மை இங்ஙன மிருக்க, முஸ்லிம்களில் பலர் சரீர சுகமா யிருக்கும் பொழுது தாம் தேடிய சொத்துக்களுக்கு சர்வ சுதந்தர பாத்திய முள்ளவரு யிருக்கும் நிலைமையில் சரீரத்தைக் கொண்டும், ஐஸ்வரியத்தைக் கொண்டும் மெய்யுலகிற்குரிய நற்காரியங்களைச்



செய்யாமலும், மரண வறிகுறியாகிய வியாதியால் பீடிக்கப்பட்டு தாம் அரும் பாடுபட்டுத்தேடிய சொத்துக்களின் மூன்றிலிரண்டு பாகத்தின் பாத்தியதையை இழந்து ஒரு பாகச் சொத்துக்கு மட்டும் சுதந்தரமுடையவர்களாக மரணத்தருவாயிலிருக்கும் நிலைமையிலும், அவர்கள் தவறி விட்ட தொழுகை, நோன்பு, ஸக்காத்து, ஹஜ்ஜு முதலியவைகளுக்குரிய குற்றப் பரிகாரங்களை அம் மூன்றிலொரு பாகச் சொத்தைக் கொண்டு கொடுக்கும்படி வஸிய்யத்துச் செய்து தம் மீது பாக்கியாயிருக்கும்ஆண்டவனுடைய கடனை ஒருவாறு நீக்கிக் கொள்ளாமலும், அல்லது அச் சொத்தை வேறு பல நற்காரியங்களுக்குக் கொடுக்கும்படி வஸிய்யத்துச் செய்து நற்பயனை அடையாமலும், மரணமடைந்து வெறும் கையாக மெய்யுலகை அடைகிறார்களென்பது வெளிப்படை. அவ்வாறு மரணித்தவர்கள் துர்ப்பாக்கியவான்களென்பதிற் சையமில்லை. எனவே, வியாதியால் பீடிக்கப்பட்ட முஸ்லிம் ஆண் பெண்களனைவோர்களும் அப்போது பாத்தியமுள்ள தங்களின் சொத்துக்களின் மூன்றிலொரு பாகத்தைக் கொண்டு அவர்கள், செய்து கொள்ள வேண்டிய கட்டளைகள் இஸ்லா மார்க்கத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அவைகளை உலமாக்கள் யாவராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட ரத்துல் முக்தார் முதலிய இஸ்லாமார்க்கத் தீர்ப்புக்குரிய முக்கிய கிதாபுகளிலிருந்து இத்தேசத்தில் நடைபெறக்கூடிய முக்கியமான சட்ட திட்ட கட்டளைகளை எடுத்து அரபி பாஷைக் கல்வியில்லாதவர்கள் எளிதில் அறிந்து கொள்ளும் பொருட்டு செந்தமிழ்ப் பாஷை இனிய நடையில் ஒரு புத்தகமாக இயற்றி அதற்கு வஸிய்யத்து லா யென நாமஞ் சூட்டி இருக்கிறேன்.

இந்நூலில் முஸ்லிம்கள் மரண காலத்தில் செய்து கொள்ள வேண்டிய முக்கிய விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. ஆகையால், இந்நூலை ஒவ்வொரு முஸ்லிமும் வாங்

இப் படித்தறிந்தால் அதில் கூறப்பட்டுள்ளபடிவஸிய்யத்து செய்யாமல் மரணமடைய அவர்கள் மனம் இடம் கொடா தென்பது திண்ணம். மரணமடைகிறவர்கள் இந் நூலில் கூறிய பிரகாரம் தன் மீதுள்ள கடமைகளை நிறைவேற்றும் படி வஸிய்யத்துச் செய்து விட்டால் அக்கடமைகளை விட்டும் ஒருவாறு நீங்கி விடுகிறான். வேறு நற்காரியங்களுக்கு கொடுக்கும்படி வஸிய்யத்துச் செய்தால் அதன் பயனையுமடைகிறான். இவன் செய்த வஸிய்யத்தை வாரிசுகள் அல்லது கார்டியன் நிறைவேற்ற வில்லையானாலும் சரியே. அவ்வாறு வஸிய்யத்தை நிறைவேற்றாததற்கு இறந்து போனவனுடைய வாரிசுகள் அல்லது கார்டியன் குற்றவாளிகளாவதுடன் ஜனங்களிடமும் பழிக்கப்படுவார்கள். ஆகையால், ஒவ்வொரு முஸ்லிமும் மரணத்தருவாயில் செய்ய வேண்டிய வஸிய்யத்தின் சட்ட திட்டக் கட்டளைகளை அறிந்து அதன்படி செய்து அதற்குரிய நற்பதவியைப் பெற எல்லாம்வல்ல இறைவன் அருள் புரிவானாக. ஆமீன்.

சென்னை, அஹமத் ஸயீது.
27—7—26. "ஸைபுல் இஸ்லாம்" ஆசிரியர், சென்னை.




பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

# வஸிய்யத்தெனும் மரண உயில்.

## 1-ம் அத்தியாயம்

(1) இஸ்லாமிய நம் நன்மார்க்க வழிப்பிரகாரம் வியாதியஸ்தன் தனக்குள்ள ஐவேஜில் மூன்றிலொரு பாகச் சொத்துக்களை வாரிசல்லாத நபர்களுக்கு வஸிய்யத்துச் செய்யலாம்.

(2) மூன்றிலொருபாகச் சொத்துக்கள் பூராவையும் அல்லது அவைகளில் சிலவற்றை அல்லது அவைகளின் வருவாய்களை வாரிசல்லாதவர்கள் அடைந்து கொள்ளும் படி செய்வதற்கு வஸிய்யத்தெனப்படும்.

### வஸிய்யத்து நான்கு வகைப்படும்

(1) வாஜிப்:—(கடமை) கலாத் (விடப்பட்ட) தொழுகை, நோன்புகளுக்கு பித்யா, (குற்றப் பரிகாரம்) விடப்பட்ட ஸக்காத் முதலியவைகளை கொடுக்கும்படிச் செய்வது.

அதாவது இறந்து போகிறவனால் விடப்பட்ட ஸக்காத்தையும், (ஏழை வரி) தொழுகையின் பித்யாவையும்,

கபாரா (குற்றப் பரிகாரம்) ஏற்பட்டிருப்பதையும் நிறை வேற்றும்படி வஸிய்யத்துச் செய்வது.

(2) முபாஹ்:—(விலக்கப்படாதது) இஃது ஸ்ரீமான் களுக்குக் கொடுக்கும்படி செய்வது. (3) மக்ரூஹ்:— (பொருத்தக் குறைவானது) பாவிக்கெனும் பெரும் பாவி களுக்குக் கொடுக்கும்படிச் செய்வது. ஆனால், அவர்கள் இவ்வாறு கொடுப்பதை முன்னிட்டு பாவச் செயல்களை விட்டுவிடுவார்களென்று கருதிச் செய்தால் மக்ரூஹல்ல. (4) முஸ்தஹப்:—(பொருத்தமானது) ஸ்ரீமான், பெரும் பாவிகளல்லாத சாமானியர்களுக்குக் கொடுக்கும்படி செய் வது.

## வஸிய்யத்தின் கருத்து

இம்மையில் கீர்த்தி ப்ரதாபத்தையும் மறுமையில் நற் பதவியையும் பெற நாடிச் செய்வதே வஸிய்யத்தின கருத்து.

## வஸிய்யத்து நிறைவேற ஏழு ஷர்த்துகளுண்டு

(1) வஸிய்யத்திற்காக விடப்பட்ட சொத்துக்களுக் குச் செய்கிறவன் சர்வ சுதந்தரமுள்ளவனயிருத்தல். என வே, சிறு வயதுடையோன், பயித்தியக்காரன் வஸிய்யத் துச் செய்தால் செல்லாது.

(2) வஸிய்யத்துச் செய்யப்பட்ட சொத்துக்களுக் குச் சமமான கடனில்லாதிருத்தல்.

(3) வஸிய்யத்துச் செய்யப்படும் சமயம் வஸிய்யத் துப் பெறுகிறவன் ஜீவனோடிருத்தல்.

(4) வஸிய்யத்துச் செய்தவனிறந்த சமயம் பெற் றுக்கொள்கிறவன் வாரீசா யில்லாதிருத்தல்.



(5) வஸிய்யத்துச் செய்தலை பெற்றுக் கொள்கிற வன் கொலை புரிந்தவனு யில்லாதிருத்தல்.

(6) வஸிய்யத்துச் செய்யப்பட்ட சொத்துக்கள் விற் கிரையஞ் செய்ய லாயக்காயிருத்தல். ஆனால் அதற்கேற் பட்ட சொத்துக்கள் அப்போது கைவச மில்லையானாலும் சரியே. உதாரணம்—தன் தோப்பில் உண்டாகப்போ கும் பலன்களை வஸிய்யத்துச் செய்யலாம்.

(7) வஸியத்துச் செய்யப்பட்ட சொத்தானது மொத் தச் சொத்தில் மூன்றிலொரு பாகமாகப் பிரிக்கலாயக்காக இருத்தல்.

## வஸியத்தின் விதிகள்

வஸிய்யத்துச் செய்கிறவன் செய்யப்பட்ட சொத் துக்களையும் பெற்றுக் கொள்ளுகிறவனையும் குறிப்பிட்டு வாய்மொழியாலாவது எழுத்து மூலமாயாவது செய்ய வேண்டியது. வஸிய்யத்தைப் பெற்றுக் கொள்ளுகிறவன் வாய்மொழியினுலாவது செய்கைகளினுலாவது ஒப்புக்கொ ள்ளவேண்டியது. மௌனமாயிருந்தால் ஒப்புக்கொண்ட தாகக் கருதப்படும். ஆதலால், வஸிய்யத்துச்செய்தவனி றந்தபின் பெற்றுக்கொள்ளுகிறவன் ரத்துச் செய்யாமலிரு ந்து இறந்துவிட்டால் அவனொப்புக்கொண்டதாகக் கருதி அவனுடைய வாரிசுகள் அதை அடைவார்கள்.

வஸிய்யத்துச் செய்யப்பட்ட வீட்டை பெற்றுக் கொள்ளுகிறவ னொப்புக்கொண்டு கைப்பற்றிருக்கும் நிலைமையிலும் அவன் அவ்வீட்டைக் கிரையஞ் செய்ய லாம்.

வஸிய்யத்துப் பெற்றவனுக்கு செய்தவன் இறந்த பின்பே வஸிய்யத்துச் செய்யப்பட்ட சொத்தில் பாத்தியமேற்படுகிறபடியால், வசிய்யத்துச் செய்தவனிருக்கும்பொழுது வஸிய்யத்துப் பெற்றவன் ஒப்புக்கொண்டாலும் ரத்துச் செய்தாலும் செல்லாது.

மூன்றிலொரு பாகத்துக்கு மேற்பட வஸிய்யத் செய்ததில் அதிகமாகச் செய்யப்பட்டதை வாரிசுகள் மேஜராயிருந்து ஒப்புக்கொண்டால் செல்லும். வாரிசுகளில் சிலர் மாத்திரம் ஒப்புக்கொண்டால் அவர்களின் பாகத்தளவு செல்லும். ஒப்புக்கொண்ட வாரிசுகள் பின் ரத்துச்செய்யப்பாத்தியமில்லை.

வஸிய்யத்துச் செய்தவனுக்கு செய்யப்பெற்றவன் வாரிசா அல்லவா என்பது செய்தவன் இறந்த பின்பு ஏற்படும் நிலைமையையே கவனிக்கப்படும். ஆதலால், வஸிய்யத்துச் செய்யும்பொழுது செய்யப்பெற்றவன் வாரிசாக இருந்து, செய்தவனிறந்தபின்பு வாரிசில்லாமல் போய்விட்டால் வஸிய்யத்துச் செல்லும். இத்தன்மைபோலவே, வஸிய்யத்துச் செய்யும்பொழுது செய்யப்பெற்றவன் வாரிசில்லாமலிருந்து செய்தவனிறந்த பின்பு அவன் வாரிசாகிவிட்டால் அவ்வஸிய்யத்துச் செல்லாது. உதாரணமாக, தன் சகோதரனுக்கு வஸிய்யத்துச் செய்யும்பொழுது செய்தவனுக்குப் பாட்டன், தகப்பன், மகன், மகனின் மகனில்லாமலிருந்து செய்தவன் இறக்கும் பொழுது மகவிருந்தால் செல்லும். தன் சகோதரனுக்கு வஸிய்யத்துச் செய்யும்பொழுது மகனிருந்து செய்தவனிறந்த பொழுது மகனில்லையானால் செல்லாது.

வாரிசுகளிலொருவருக்கு வஸிய்யத்துச் செய்ததையும், மூன்றிலொரு பாகத்திற்கு அதிகமாக வஸிய்யத்துச்



செய்யப்பட்டதையும் மற்ற வாரிசுகள் ஒப்புக்கொள்ளுவதற்கும், ரத்துச் செய்வதற்கும் வஸிய்யத்துச் செய்தவன் மரணத்திற்குப் பின்னரே பாத்தியம் பெறுவார்கள்.

வாரிசுகள் ஸ்ரீமானுக தேவை யற்றிருக்கும் பட்சத்தில் மூன்றிலொரு பாகத்துக்கு குறைவாக இதராளுக்கு வஸிய்யத்துச் செய்வது முஸ்தஹப். வாரிசில்லாவிடில் தனக்குள்ள பூரா முதலையும் வஸிய்யத்துச் செய்து விடலாம். ஆனால், நாடியமட்டில் ஏழைகளுக்கு சதக்காக் கொடுத்து மீதியை வஸிய்யத்துச் செய்வது முஸ்தஹப்.

வஸிய்யத்துச் செய்தவன் கடனாளியாக இருந்தால் முதலாவது அக்கடனை நிறைவேற்றி எஞ்சியுள்ள சொத்துக்களில் மூன்றிலொரு பாகத்திலிருந்தே வஸிய்யத்துக்களை நிறைவேற்ற வேண்டும்.

கர்ப்பத்திற்கு வஸிய்யத்துச் செய்யலாம். நாற் கால் ஜந்துக்களின் கர்ப்பங்களைச் சுட்டிக் காட்டி அவைகளையும் வஸிய்யத்துச் செய்யலாம். ஆனால், வஸிய்யத்துச் செய்கையில் கர்ப்பமுண்டாயிருக்க வேண்டியது ஷர்த்து. வஸிய்யத் செய்யும் போது கர்ப்பமில்லை என பின்பு வெளியானால் செல்லாது.

மனித வர்க்க கர்ப்பம் அதற்கு வஸிய்யத்துச்செய்த 6 மாதத்துக்குள் ஜனித்தால் வஸிய்யத் செய்யும்பொழுது கர்ப்ப மிருந்ததாகக் கருதப்பட்டு அவ்வஸிய்யத்துச் செல்லும். பின்பு ஜனித்தால் செல்லாது. இவ்வாறே மிருகங்களின் கர்ப்பத் தவணை ஒட்டகம், குதிரை ஒரு வருஷம், மாடு 9 மாதம், ஆடு 5 மாதம், இதற்குள் பிறந்தால் அவைகளைச் செய்த வஸிய்யதுச் செல்லும்.

கர்ப்பத்துக்கு ஹிபத் (தானம்) கொடுப்பது கூடாது. ஏனெனில், ஹிபத்துச் சொத்தைக் கைப்பற்றுதல் ஷர்த்து. கர்ப்பமோ அதை கைப்பற்ற முடியாது.

வாரிசுகளுக்கு வஸிய்யத்துச் செய்தால் செல்லாது. ஆனால், மற்ற வாரிசுகள் மேஜர்களா யிருந்து அதை சம்மதித்தால் செல்லும். பெண்சாதிமட்டு மிருக்கையில் புருஷன் பூரா முதலையும் ஒருவனுக்கு வஸிய்யத்துச் செய்தால் பெண்ஜாதி பாகம் 1/6 போக மீதியை வஸிய்யத்து பெற்றவனடைவான். இதுபோல் புருஷன் மட்டு மிருக்க பெண்ஜாதி தன் முழுச் சொத்தையும் மற்றொருவனுக்கு வஸிய்யத்துச் செய்தால் புருஷன் பாகம் மூன்றிலொன்று போக மீதியை வஸிய்யத்துப் பெற்றவன் அடைவான். அதாவது:—பூரா முதலும் வஸிய்யத்துச் செய்யப்பட்ட சொத்தில் வஸிய்யத்துக்கு ரிய பாகம் மூன்றிலொன்றை நீக்கி எஞ்சியுள்ள இரண்டு பாகத்தில் பெண்ஜாதியின் பாகமாகிய நாலிலொன்றை அவளுக்குக் கொடுக்க வேண்டும். இவ்விதம் கொடுக்கப்பட்ட நான்கிலொருபாகம் மொத்தச் சொத்தில் ஆறிலொன்றாகும். இது போலவே பெண்ஜாதியுடைய சொத்தில் வஸிய்யத்திற்குரிய பாகம் மூன்றிலொன்றை நீக்கி எஞ்சியுள்ள இரண்டு பாகத்தில் புருஷன் பாகமாகிய பகுதியை கொடுக்க வேண்டும். இப்பகுதி பங்கு மொத்த சொத்தில் மூன்றிலொரு பாகமாகும்.

வஸிய்யத்துச் செய்த பின்பு செய்தவனுக்கு பைத்தியமுண்டாகி 6 மாதத்திற்கு மேல் அப்பைத்தியம் நீடித்திருந்தால் வஸிய்யத்து ரத்தாய் விடும்.

வியாதியினால் நாவில் தடுமாற்ற முண்டாகிப் பேச முய்யாதவன் கைச் சைக்கினைகளால் வஸிய்யத்துச் செடி



தால் செல்லாது. ஆனால், மேற்படி வியாதி நீண்டகாலமிருந்து வருவதை முன்னிட்டு ஜனங்கள் அவனுடைய சைக்கினைகளை அறிந்து கொள்ளும் நிலைமை ஏற்பட்டிருக்கும் பக்ஷத்தில் வஸிய்யத்துச் செல்லும். ஊமை சைக்கினையினால் வஸிய்யத்துச் செய்தால்கூடும். ஏனெனில், அவனுடைய சைக்கினை சொல்லுடைய ஸ்தானத்திலிருக்கிறதினாலேயே.

மூன்றிலொன்று நான்கிலொன்று எனச் சொத்துக்களை நிதானிக்காமலும் அல்லது ஒரு சொத்தைச் சுட்டிக் காட்டாமலும் அல்லது ரூ. 100, 200 எனத் தொகையைக் குறிப்பிடாமலும் சில சொத்து, சில ரூபா, சில பங்கென்று வசிய்யத்துச் செய்தால் செல்லாது.

முஸ்லிமான தகப்பன் முஸ்லிமல்லாத தன் மகனுக்கு வசிய்யத்துச் செய்தால் செல்லாது.

தன் வீட்டை ஒருவனுக்கு இரவல் கொடுக்கும்படியாக வசிய்யத்துச் செய்தால் செல்லாது.

ஒருவனுக்கு அவன் ஜீவியதிசை பரியந்தம் குடியிருந்துகொள்ளும்படி வசிய்யத்துச் செய்தால் கூடும்.

காலத்தைக் குறிப்பிடாமல் பொதுவாய் குடியிருந்து கொள்ளும்படி வசிய்யத் செய்தால் அவன் தன் ஆயுள் வரை குடியிருந்து வரலாம். ஆனால் அவனிறந்தபின் அவனுடைய வாரிசுகளுக்கு அதில் குடியிருக்கபாத்தியமில்லை. தனக்குள்ள ஒரே வீட்டை குடியிருக்க மற்றொருவனுக்கு வஸிய்யத்துச் செய்தால் மேற்படி வீட்டை 3பாகம் செய்து ஒரு பாகத்தில் வஸிய்யத்துப் பெற்றவன் குடியிருக்கவேண்டும். அவ்விதம் பிரிக்க லாயக்கில்லையானல் வஸிய்யத்துப் பெற்றவனும் வாரிசுகளும் ஒரு வருஷத்திய

காலமானத்தை மூன்ருகப் பிரித்து கிரமப்படி குடியிருந்து வரவேண்டியது. இந்நிலைமையிலுள்ள வீட்டை வாரிசுகள் எவரும் விற்பனை செய்தால் கிரையம் செல்லாது.

ஒருவன் தன் ஜனாஸாவை இன்ன நபர் தொழவைக்க வேண்டுமென்றும், இன்னவூரிலடக்கஞ் செய்ய வேண்டு மென்றும், இன்ன புடவையில் கபனிட வேண்டுமென்றும் கபுருக்கு கோரி கட்டும்படியும், கபுரடியில் குர்ஆனோதும் படியும் வஸிய்யத்துச் செய்து அதற்காக ஒரு சொத்தை ஒதுக்கி வைத்தால் அவ்வஸிய்யத்துச் செல்லாது.

தான் செய்த வஸிய்யத்தை வாய் மொழியினுலும் செய்கைகளினுலும் ரத்துச் செய்யலாம். இன்னருக்குநான் செய்திருந்த வஸிய்யத்தை ரத்துச்செய்துவிட்டேனெனச் சொல்லுவதாலும், வஸிய்யத்தின் சொத்தை விக்கிரையம் மாறுதல் முதலியவைகள் செய்வதாலும் வஸிய்யத்து ரத்தாகிவிடும்.

ஒருவனுக்குச் செய்த வஸிய்யத்தை மற்ருெருவனைக் குறிப்பிட்டு அது இவனுக்கெனக் கூறினல் முன்னபருக்கு ரத்தாகி இரண்டாம் நபருக்குச் செல்லும். இரண்டாவது வஸிய்யத்துச் செய்யப்பெற்றவன் வஸிய்யத்துச் செய்கிற நேரத்தில் இறந்துபோயிருந்தால் முந்தினவனுக்கே அவ்வஸிய்யத்துச் செல்லும். ஆனல், இரண்டாவதாக்வஸிய்யத்துச் செய்யப் பெற்றவன் வஸிய்யத்துச் செய்த நேரத்தில் உயிருடனிருந்து வஸீய்யத்துச் செய்தவனுக்கு முன்பு இறந்து போனல் இருவருக்கும் செல்லாது.

முடவன், வாதநோயாளி முதலியவர்கள் நீண்ட காலமாக வியாதியிலகப்பட்டு அவ்வியாதியை முன்னிட்டு மௌத்தை பயப்படாம லிருப்பவர்கள் சரீர சுவாத்திய



முள்ள மற்றவர்களைப்போல் அவர்களுக்குள்ள சகல சொத்துக்களையும் வஸிய்யத்து முதலிய பராதீனம் செய்யலாம்.

ஒருவன் பல காரியங்களுக்காகச்செய்யப்பட்ட வஸிய்யத்தின் தொகை, வஸிய்யத்துச் செய்தவனுடைய சொத்தின் மூன்றிலொரு பாகச் சொத்தினுடைய தொகைக்கு அதிகமாக இருப்பினும் அதே மூன்றிலொரு பாகத்திலிருந்து ஈவுப்படி குறைத்து நிறைவேற்ற வேண்டும்.

அப்படி நிறைவேற்றுவதிலும் பர்லு, வாஜிபு, முஸ்தஹப் ஆகிய முறையைத் தழுவியே வரிசைக் கிரமமாக நிறைவேற்ற வேண்டும். செய்யப்பட்ட வஸிய்யத்துகளெல்லாம் ஒரே இனமாக இருந்தால் அவன் கூறிய வரிசைக் கிரமப்படி நிறைவேற்ற வேண்டும்.

ஒருவன் தன் சொத்தில் மூன்றிலொரு பாகம் ஒருவனுக்கென்றும், ஆறிலொரு பாகம் மற்ருெருவனுக்கென்றும், பகுதி மற்ருெருவனுக்கென்றும் வஸிய்யத்துச்செய்தால் அவனுடைய மூன்றிலொரு பாகச் சொத்திலிருந்தே அவன் கூறிய மேற்கண்ட ஈவுப்படி கொடுக்கப்படும்.

## பித்யாக்களின் விவரம்

வியாதி முதலிய காரணங்களை முன்னிட்டுவிடப்பட்ட பர்லான தொழுகை நேரம் ஒன்றுக்கு ஒரு படி மணிக் கோதுமையையும் பர்லான நோன்பை நோற்காமல் விட்டதற்கு ஒவ்வொரு நோன்புக்கு ஒரு படி மணிக் கோதுமையையும் ஏழைகளுக்குக் கொடுக்கும்படி செய்ய வேண்டியது.

பர்லான நோன்பை வேணுமென்று தக்க காரணமின்றி முறித்தல், விவாகம் செய்யக்கூடாத (மஹ்ரம்)

பெண்களுக்குத் தன் பெண்சாதியை ஒப்பிடுதல், சத்திய த்தை முறித்தல் ஆகிய காரணங்களால் கப்பாரா (தெண்ட குற்றம்) விதியாகும். இவைகளில் முந்திய இரண்டிற்கும் வஸிய்யத்துச் செய்திருந்தால் 60மிஸ்கீன்களுக்கு 2 நேரம் சாப்பாடு அளிப்பதாலும் அல்லது ஒரு மிஸ்கீனுக்கு 60 நாள் 2 நேரம் சாப்பாடு கொடுப்பதாலும், அல்லது 60 பேருக்கு 60 படி மணிக்கோதுமை கொடுப்பதாலும் வஸி ய்யத்து நிறைவேறும். 3வது குற்றத்திற்கு வஸிய்யத்துச் செய்திருந்தால் 10 மிஸ்கீன்களுக்கு ஒரு வேளை ஓஜ்பனம் கொடுப்பதாலும் அல்லது 10 மிஸ்கீன்களுக்கு உடுப்பிடவை கொடுப்பதாலும் வஸிய்யத்து நிறைவேறும்.

விடப்பட்ட பர்லான ஹஜ்ஜை நிறைவேற்றும்படி வஸியத்துச் செய்தால் அவனின் ஊரிலிருந்து மக்கா சென்று ஹஜ்ஜு செய்வதற்குரிய செலவுக்கு செய்தவனுடைய மூன்றிலொரு பாகச் சொத்துக்கள் போராவிட்டால் எந்தவிடத்திலிருந்து போய் ஹஜ்ஜுச் செய்ய அம்மூன்றிலொரு பாகச் சொத்து போருமாயிருக்கிறதோ அவ்விடத்திலிருந்து போய் ஹஜ்ஜுச் செய்யும்படி செய்விக்கவேண்டியது.

வியாதியஸ்தன் வஸிய்யத்துச் செய்து பின்பு சௌக்கியமாகச் சில காலமிருந்தால் வஸிய்யத்துச் செய்தவன் வஸிய்யத்தை ரத்துச் செய்யாவிடினும் ரத்தாகி விடும்.

தன்னுடைய பஞ்சை ஒருவனுக்கும், அதிலிருக்கிற விதையை மற்றவனுக்கும்; ஆட்டினிறச்சியை ஒருவனுக்கும், அதன் தோலை மற்றொருவனுக்கும்; நெல்லை ஒருவனுக்கும், அதன் வைக்கோலை மற்றொருவனுக்கும் என வஸிய்யத்துச் செய்யலாம். மேற்கண்டவைகளைத் தனித்



தனியே பிரிப்பதற்காக ஏற்படும் செலவுகள் அதில் சம்பந்தப்பட்ட இருவர்களையும் பொருக்கும்.

தன் சொத்துக்களின் மூன்றிலொரு பாகத்தை பைத்துல் முகத்தஸ் போன்ற பள்ளி முதலிய புண்ணியஸ்தலங்களிலொன்றைக் குறிப்பிட்டு வஸிய்யத்துச் செய்யலாம். அந்தச் சொத்தை குறிக்கப்பட்ட ஸ்தலத்தின் மராமத்துச் செய்தல், தீபமேற்றல் முதலானவைகளுக்குச் செலவு செய்யலாம். தன்னுடைய ஒரு பணப் பையைச் சுட்டிக் காட்டி இதிலிவ்வளவு தொகையிருக்கிறதெனச் சொல்லி இன்னானுக்கு அதைக்கொடுக்கும்படி வஸிய்யத் செய்த நிலைமையில் அந்தப் பையில் தங்கம் வெள்ளி முதலான பல நாணயங்கள் கலந்தும் சொல்லப்பட்ட தொகைக்கு ஜாஸ்தியாகவுமிருந்தால் அத்தொகை அவரின் சொத்துகளில் மூன்றிலொரு பாகத்துக்குச் சரியாகவோ குறைவாகவோ இருக்கும் பக்ஷத்தில் அப்பையிலுள்ள நாணயங்களனைத்தையும் வஸிய்யத்து பெற்றவனுக்கே கொடுத்துவிடவேண்டியது. அந்தப் பையிலுள்ள தொகை அவரின் சொத்துக்களின் மூன்றிலொரு பாகத்துக்கு மேற்பட்டதொகையாயிருந்தால் வாரிசுகளின் சம்மதமின்றி அதிகப்பட்ட தொகை செல்லாது.

தனக்கொருவன் கடன் கொடுக்க வேண்டிய நிலைமையில் அவனைப் பார்த்து நானிறந்து விடும் பட்சத்தில் என் கடனை விட்டும்நீங்கிவிட்டாயெனச் சொன்னால் அதுவஸிய்யத்தாகக் கருதப்படும். ஆனால், கடன்காரனைப்பார்த்து நீ இறந்துவிட்டால் எனக்குத் தரவேண்டிய கடனை விட்டும் நீங்கிவிட்டாயெனச் சொன்னால் வஸிய்யத்தாகக் கருதப்படமாட்டாது.

வஸிய்யத்துச் செய்யப்பட்ட சொத்துக்களை வாரிசுகள் பந்தோபஸ்தாக பராமரித்திருக்கிற நிலமையில் அகஸ்மாத்தாக அவைகள் அழிந்துபோனால் வஸிய்யத்துப்பெற்றவனுக்கு வாரிசுகள் ஜவாப்தாரிகளாக மாட்டார்கள். ஆனால், வாரிசுகளின் அஜாக்கிரதையாலச் சொத்துக்கள் அழிந்து போனால் வஸிய்யத்துப் பெற்றவனுக்கு அவர்கள் கொடுத்தே தீரவேண்டும்.

தன்னுஸ்தி முழுமையுமொருவனுக்கெனவும் பிறகு மூன்றிலொரு பாகச் சொத்து மற்றொருவனுக் கெனவும் வஸிய்யத்துச் செய்தால் அவரின் சொத்துக்களில் மூன்றிலொரு பாகச் சொத்தை மட்டும் மேற்கண்ட இருவர்களுக்கும் சமமாகப் பிரித்துக்கொடுக்கும்படி இமாம் அபூஹனீபா (ரஹ்) அவர்களும் அதை நான்கு பாகமாக்ப் பிரித்து மூன்று பாகத்தை முதலாமவனுக்கும், ஒரு பாகத்தை இரண்டாமவனுக்கும் கொடுக்க வேண்டுமென்று இமாம் அபூயூசுபவர்களும், இமாம் முகம்மதவர்களும் கூறியிருக்கிறார்கள்.

தன் சொத்துக்களில் ஆறிலொரு பாகச் சொத்தை ஒருவனுக்குக் கொடுக்கும்படி 2 தடவை கூறினால் ஒரே வஸிய்யத்தாகக் கருதி ஆறிலொரு பாகமே அவனுக்குக் கொடுக்கவேண்டியது.

தனக்குள்ள ரொக்கத்தையும் வரவேண்டிய கடன்களையும் சேர்த்து மொத்தத் தொகையில் மூன்றிலொரு பாகத்தை ஒருவனுக்குக் கொடுக்கும்படி வஸிய்யத்துச் செய்தால் ரொக்கத்தில் மூன்றிலொரு பாகத்தையும் அவ்வப்போது வசூலாகும் கடன்களில் மூன்றிலொரு பாகத்தையும் கொடுக்கவேண்டும்.



தன் சொத்துக்களில் மூன்றிலொரு பாகச் சொத்தை இன்னானுக்கென சொத்தைக் குறிப்பிடாமல் பொதுவாக வஸிய்யத்துச் செய்தால் செய்தவன் மரணமடையும் போதுள்ள சொத்துக்களெவ்வளவோ அவைகளில் மூன்றிலொரு பாகமெனக் கருதப்படும். அவன் வஸிய்யத்துச் செய்யும் போது ஏழையா யிருந்து அப்பால் ஆஸ்தி பெருகினும் சரியே.

தன் சொத்துக்களில் மூன்றிலொரு பாகத்தைப்பொதுவாக ஏழைகளுக்கெனவஸிய்யத்துச் செய்தால் ஏழைகளில் ஒருவனுக்கும் பலருக்கும் கொடுக்கலாம். ஆனால், ஒரு ஏழை கூட்டத்தைச் சுட்டிக் காட்டி வஸிய்யத்துச் செய்தால் அக்கூட்டத்தி லுள்ளவர்க ளனைவருக்கும் கொடுக்க வேண்டும்.

தனக்குள்ள சொத்துக்களில் மூன்றிலொரு பாகச் சொத்தை ஒரு தேசத்தை அல்லது ஒரு ஊரைக் குறிப்பிட்டு அங்குள்ள ஏழைகளுக்கென வஸிய்யத்துச் செய்திருந்தால் எல்லா தேச அல்லது எல்லா ஊர் ஏழைகளுக்கும் கொடுக்கலாம். ஆனால் குறிப்பிட்ட தேசம் அல்லது ஊர் ஏழைகளுக்கு கொடுப்பது நலம்.

தன் வாரிசுகளிடத்தில் ஒருவனை குறிப்பிட்டு இவனுக்கு நான் கடன் கொடுக்க வேண்டியதிருக்கிறது. அதை கொடுத்து விடுங்களென தொகையை குறிப்பிடாமல் சொன்னால் அந்த கடனை நிர்ணயிக்க தஸ்தாவேஜ் முதலான ஆதாரமில்லாத பக்ஷத்தில் அதை வஸிய்யத்தாகபாவித்து வேறு வஸிய்யத்துச் செய்யப்படாவிடில் அதை மூன்றிலொரு பாகத்துக்குள் நிறைவேற்ற வேண்டும். இதற்கு

மூன் மூன்றிலொரு பாகத்தளவில் வேறு வஸிய்யத் செய்திருந்தாலும் பின்னால் செய்தாலும் மேற்படி கடன்காரனுக்கு ஒன்றுங் கொடுக்க வேண்டியதில்லை.

தன்னுடைய சொத்துக்களில் மூன்றிலொரு பாகச் சொத்தை வாரிசுகளி லொருவனுக்கும் அன்னிய னொருவனுக்குமாக வஸிய்யத்துச் செய்தால் அன்னியனுக்கு அம் மூன்றிலொரு பாகச் சொத்தில் பாதி கொடுக்க வேண்டும்.

இன்னும் தனக்குள்ள மூன்றிலொரு பாகச்சொத்தை தான் தவறவிட்ட தொழுகைகள் நோன்புகளுக்காக பித்யா (பரிகாரம்) கொடுக்கும்படி வஸிய்யத்துச் செய்தால் அவரிறந்ததன் பின்பு அவராலேற்படுத்தப்பட்ட பிரதிநிதியாகிறவன் மரண மானவரின் வாரிசுகளில் ஸக்காத் ஸதக்கா வாங்க லாயக்கான ஏழைகளுக்கு மேற்படி பித்யாக்களை கொடுப்பது கூடும். மூன்றிலொரு பாகச்சொத்தைஏழைகளுக்கென பொதுவாக வஸிய்யத் செய்தால்செய்தவரின் வாரிசுகளில் ஏழைகளா யுள்ளவர்களுக்கும் கொடுக்கலாம். ஆனால், அவ்வேழை வாரிசுகளிற் சிலருக்கு மட்டும் கொடுக்க மற்ற ஏழை வாரிசுகளின் சம்மதம் வேண்டும்.

மூன்றிலொரு பாகத்துக்குள்ள தனது ஸ்தாவர சொத்தை ஒருவனுக்கு வஸிய்யத்துச் செய்தவன் மரணத்துக்குப் பின் அவனின் வாரிசுகள் அந்த சொத்தை பாகஞ் செய்து கொண்டு சில காலஞ் சென்ற பின் வஸிய்யத்தை பெற்றவன் அயல் கிராமத்திலிருந்து வந்து வஸிய்யத்தேற்பட்டிருக்கிற பிரகாரம் அச்சொத்தை கேட்டால் கொடுத்துவிட வேண்டும். வாரிசுகள் அந்த சொத்தை பாகஞ் செய்து கொண்ட விவரம் அவனுக்கு தெரிந்திருந்தாலுஞ் சரியே.



தன் சொத்தின் மூன்றிலொரு பாகத் தொகைக்கு ஒரு வீட்டை கிரையம் பெற்று அவ்வீட்டை ஒருவனுக்கு வஸிய்யத்துச் செய்தால் செய்தவர் இறந்தபின் வஸிய்யத்துப் பெற்றவனின் வசமிருந்து அந்த வீட்டை அடுத்த வீட்டுக்காரன் (அண்டை). பக்க வீட்டுப் பாத்திய பிரகாரம் கைப்பற்றிக் கொள்ளும் பக்ஷத்தில் செய்தவரின் வாரிசுகள் மேற்படி வீட்டின் கிரையத் தொகையை வஸிய்யத்துப் பெற்றவனுக்குக் கொடுத்துவிட்டு அடுத்த வீட்டுக்காரனிடம் கிரையத் தொகையை வசூலித்துக்கொள்ளவேண்டும். ஆனால், அவ்வீட்டை வஸிய்யத்துப் பெற்றவனிடமிருந்து வஸிய்யத்துச் செய்தவனுக்கு கிரையஞ் செய்தவனுடைய வாரிசுகளிலொருவன் தனக்கு பாத்தியப்பட்ட வீடெனக் கைப்பற்றிக்கொள்ளும்பட்சத்தில் வஸிய்யத்துச் செய்தவனின் வாரிசுகள் வஸிய்யத்துப் பெற்றவனுக்கு கிரையம் கொடுக்கக் கடமைப்பட்டவர்களல்லர்.

தன் வீட்டில் குறிப்பிட்ட காலம்வரை குடியிருந்து கொள்ளும்படி அல்லது அவ்வீட்டின் வரும்படியை அனுபவித்துக்கொள்ளும்படி ஒருவனுக்கு வஸிய்யத்துச் செய்தால் குறிப்பிட்ட வாய்தாவரை அது செல்லும்.

காலத்தைக் குறிப்பிடாமல் குடியிருந்துகொள்ளும்படி பொதுவாகச் செய்திருந்தால் பெற்றுக் கொள்கிறவனுடைய ஆயுள்வரை செல்லும். வஸிய்யத்துப் பெற்றவனின் மரணத்திற்குப்பின் வஸிய்யத்துச் செய்தவனின் வாரிசுகளுக்குச் சேர்ந்துவிடும். வஸிய்யத்துச் செய்தவனுக்குமுன் வஸிய்யத்துப்பெற்றவனிறந்துபோவானாகில் வஸிய்யத்து ரத்தாகிவிடும்.

தனக்குள்ள சொத்துக்களில் 1/3-பாகத்துக்கு மேற்படாத ஒரு வீட்டின் வரும்படியை ஒருவனுக்குவஸிய்யத்

துச் செய்தால் அவ்வீட்டை வாரிசுகள் வாடகைக்குவிட்டு வரப்பட்ட வரும்படியை வஸிய்யத்துப் பெற்றவனுக்குக் கொடுக்கவேண்டும். மேற்படி வீட்டை அவனிடம் ஒப்படைக்கக் கூடாது.

குடியிருப்பதற்காக வஸிய்யத்துப் பெற்றவன் தான் அவ்வீட்டில் குடியிராமல் அதை வாடகைக்கு விடக்கூடாது. இதுபோலவே, வீட்டின் வரும்படியை அனுபவிக்க வஸிய்யத்துச் செய்திருந்தால் அதில் அவன் குடியிருக்கக்கூடாது. தன் சொத்தில் மூன்றிலொரு பாகத்துக்குட்பட்ட தோப்பின் மகசூலை ஒருவனுக்கு வசிய்யத்துச் செய்தால் செய்தவனிறக்குங் காலத்தில் அத்தோட்டத்தில்மகசூலுண்டாயிருந்தால் அதை அவன் அனுபவித்துக் கொள்ளவேண்டும். தோட்டத்திலுள்ள மகசூல்களை காலா காலம் அனுபவித்துக் கொள்ளும்படி வஸிய்யத்துச் செய்தால் பெற்றுக் கொள்பவனின் ஆயுள்வரை மகசூல்களை அனுபவித்துக்கொள்ள வேண்டியது. வஸிய்யத்துப் பெற்றவன் இறந்தபின் வஸிய்யத்துச்செய்தவனின் வாரிசுகள் அச்சொத்தையும் மகசூலையும் அடைவார்கள்.



## 2-ம் அத்தியாயம்

### கார்டியனென்னும் போஷகனைப்பற்றிய விவரம்

தன்னுடைய மரணத்துக்குப் பின் தன் சொத்துக்களைப் பாதுகாப்புப் பரிபாலனஅபிவிருத்தி செய்துவரவும், வரவேண்டிய கடன்களை வசூல் செய்யவும் செய்யப்பட்ட வஸிய்யத்துகளை நிறைவேற்றவும், வாரிசுகளுக்குஏற்பட்ட பாகப் பிரகாரம் அவைகளைப் பாகித்துக் கொடுக்கவும் நியமிக்கப்படுபவனுக்கு கார்டியனெனப்படும்.

ஒருவன் மற்றொருவனைக் கார்டியனாக நியமித்து கார்டியனாக நியமித்திருப்பதாக அவனுக்குஅறிவித்தபொழுது அவன் ஒப்புக்கொண்டால் கார்டியனாகி விடுவான். அவன் மறுத்தால் ரத்தாகி விடும்.

ஆனால், ஏற்படுத்தியவன் முன்னிலையில் அவன் ஒப்புக்கொண்டு பின்பு அவனுக்கு மறைவாகவோ அல்லது அவனின் மரணத்துக்குப் பிறகோ அவன் ரத்துச் செய்தால், அது ரத்தாகாது.

கார்டியனாக ஏற்படுத்தியபொழுது மௌனமாயிருந்திருக்கும் பக்ஷத்தில் செய்தவனிறந்ததன் மேல் ஒப்புக்கொள்ளவும், ரத்துச் செய்யவும் கார்டியனாக நியமிக்கப்பட்டவனுக்கு அதிகாரமுண்டு.

கார்டியனாக நியமிக்கப்பட்டவனுக்கு அவ்வேலையைப் பார்க்க முடியாதிருக்கும் பக்ஷத்தில் காஜியிடம் அவன்

சென்று என்னால் வேலை பார்க்கச் சாத்தியப்படாதெனச் சொல்லும்பக்ஷத்தில் காஜி அவனை நீக்கிவிடலாம்.

தன் சொத்துக்களுக்கு கார்டியனாக நியமிக்கப்பட்டவன் இல்லாத சமயம், ஏற்படுத்தியவன் அவனை கார்டியன் ஸ்தானத்தை விட்டும் நீக்கி விடலாம்.

பிரிவறியாத சிறுவன், பாசிக் (பெரும் பாவி), முஸ்லிமல்லாதார், ஆகியவர்களை கார்டியனாக நியமித்தால் செல்லாது.

ஒருவர் மேற்கண்டவர்களில் ஒருவனைக் கார்டியனாக ஏற்படுத்தி யிருந்தாலும் காஜி ரத்துச் செய்து அவனுக்குப் பதிலாக வேறொருவரை நியமிக்க வேண்டும்.

ஆனால், காஜி நீக்குவதற்கு முன் அந்தச் சொத்துக்கள் சம்பந்தமாக அக் கார்டியன் செய்த வேலைகளை ஒப்புக் கொள்ள வேண்டும்.

இறந்தவனால் நியமிக்கப் பெற்ற கார்டியன் வேலை பார்க்க அசக்தனெனத் தெரிந்தால் காஜி அவனை விலக்கி அவனுக்குப் பதிலாக வேறொருவனை நியமிக்கலாம். அக் கார்டியன் மோசக்காரனெனத் தெரிந்தால் அவனை விலக்குவது காஜியின் கடமையாகும்.

காஜியால் நியமிக்கப்பட்ட கார்டியனை காரணமில்லாமலே விலக்கி வேறொருவனை ஏற்படுத்த காஜிக்கதிகாரமுண்டு.

ஒருவன் தன் சொத்துக்களுக்கு இரண்டு பேர்களை கார்டியனாக நியமித்தால், கார்டியனான இருவர்களில் ஒரு



வன் மற்றொருவனுடைய சம்மதமின்றி கீழ்க்கண்ட விஷயங்களைத் தவிர வேறு காரியங்களைச் செய்யக் கூடாது.

அதாவது கபன் வாங்கல், பிரேதத்தை அடக்கம் செய்தல், இறந்தவனுடைய குடும்பத்தின் முக்கிய சம்ரக்ஷணைக்குரிய சாமான்களை வாங்கிக் கொடுத்தல் வாரிசுகளுக்காக வரும் இனாம்களைப்பெறுதல், அமானிதங்களை நிறைவேற்றுதல், குறிப்பிடப்பட்ட வஸிய்யத்துக்களைச் செய்தல்,அழிந்துபோகக்கூடிய ஸ்திதியிலிருக்கும்வஸ்துக்களை விற்பனை செய்தல் ஆகிய இக்காரியங்களை ஒரு கார்டியன் மற்றொருவன் சம்மதமின்றி அல்லது அவனுக்குத் தகவல் கொடாமல் செய்யலாம்.

இறந்துபோனவன் தன் சொத்துக்கு ஒருவனை கார்டியனாக ஏற்படுத்தியதை காஜி அறியாமல் வேறு ஒருவனை அச்சொத்துக்குக் கார்டியனாக நியமித்தால் இருவரும் கார்டியனாயிருந்து தனித்தனியே வேலையைப் பாகித்துக்கொண்டு வேலை பார்க்க வேண்டும்.

இரண்டு கார்டியன்களில் ஒருவன் இறந்துபோனால் அவனுடைய வேலையையும் மற்ற கார்டியன் சேர்த்துப் பார்க்கவேண்டும். ஆனால், இவ்விரு கார்டியன்களையும் ஏற்படுத்தியவன், இவ்விருவர்களில் ஒருவன் இறந்துவிட்டால் அவனுக்குப் பதிலாக வேறு ஒருவனை கார்டியனாகச் சேர்த்துக்கொள்ளும்படி சொல்லியிருந்தால், இறந்துபோன கார்டியனுக்குப் பதிலாக மற்றொருவனை காஜி நியமிப்பார். இறந்துபோனவனால் ஏற்படுத்தப்பட்ட ஒரு

கார்டியன் அவன் இறக்கும்போது தன் சொந்தச் சொத்துக்களுக்கும், தான் கார்டியனுயிருந்து பார்த்து வந்த சொத்துக்களுக்கும் ஒருவனை கார்டியனுக ஏற்படுத்திஞல் செல்லும்.

கார்டியன் நியமிக்கப்பட்ட சொத்துக்குரிய வாரிசுகள் மைனர்களாயிருந்தாலும் அல்லது அவர்கள் மேஜராயிருந்துமூன்றுநாள் பயணத்திற்கு அப்புறம் இருந்தாலும் அவ்வாரிசுகளின் அனுமதியின்றிஇறந்துபோனவன்செய்த வஸிய்யத்துக்களை கார்டியன் நிறைவேற்றலாம். வஸிய்யத்துப் பெற்றவன் மூன்றுநாள் பயணத்திற்கு அப்புறம் இருக்கும்பொழுது, அல்லது அவன் ஆஜராக இருந்து அவனுடைய அனுமதியின்றி வாரிசுகளின் சொத்துக்களை வஸிய்யத்துச் செய்யப்பட்ட சொத்தை விட்டுப் பிரித்து வாரிசுகளுக்குக் கார்டியன் கொடுக்கக்கூடாது. அவ்வாறு கொடுக்கப்பட்டநிலைமையில்வஸிய்யத்துச் செய்யப்பட்ட சொத்து கார்டியன் கையிலிருந்து அழிந்துபோனுல் வாரிசுகளுக்குப் பிரித்துக்கொடுக்கப்பட்ட இரண்டு பாகச் சொத்துக்களிலிருந்துவஸிய்யத்துப் பெற்றவனுக்குக்கொடுக்கவேண்டும். வாரிசுகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்ட சொத்துக்கள் அவர்கள் கையில் அழிந்து போயிருந்தால் வாரிசுகளும் கார்டியனும் வஸிய்யத்துப் பெற்றவனுக்கு ஜவாப்தாரி ஆவார்கள். ஆனுல், காஜியின் உத்தரவின்பேரில் கார்டியன் மேற்கூறப்பட்டவாறு பங்கு பிரித்துக் கொடுத்திருந்தால் வஸிய்யத்துப் பெற்றவனுக்கு வாரிசுகளுடைய இரு பாகங்களிலிருந்து ஒன்றும் கொடுக்கவேண்டியதில்லை. வாரிசுகளும் கார்டியனும் ஜவாப்தாரிகளாகவுமாட்டார்கள்.



ஒரு சொத்தை விக்கிரயம் செய்து அப்பணத்தை சதக்கா கொடுப்பதற்காக நியமிக்கப்பெற்ற கார்டியன் அச்சொத்தை விக்கிரயம் செய்து அப்பணத்தை சதக்கா கொடுத்தபின் அச் சொத்தை ஒருவன் தனக்கு பாத்தியப்பட்டதென விக்கிரயம் பெற்றவனிடமிருந்து கைப்பற்றிக் கொண்டால் கிரயதாருக்கு விக்கிரயம் செய்த கார்டியன் கிரயத் தொகையைக் கொடுத்துவிட்டு கார்டியனுக இவனை நியமித்துவிட் டிறந்து போனவனுடைய வாரிசுகளுடைய பாகங்களிலிருந்து அத்தொகையை . அவன் பெற்றுக் கொள்ளவேண்டும். வாரிசுகளிடம் அப்பாகச் சொத்துக்கள் அழிந்துபோயிருந்தால் கிரயதாருக்கு கார்டியனே ஜவாப்தாரி ஆவான்.

மைனருடைய சொத்தை விக்கிரயஞ் செய்ய நியமிக்கப்பட்ட கார்டியன், அச்சொத்தை விக்கிரயம் செய்த பின்பு அக்கிரயத் தொகை மேற்படி கார்டியன் கையினுல் அழிந்துபோன நிலைமையில், விக்கிரயம் செய்யப்பட்ட சொத்தை கிரயதாரிடமிருந்து வேறொருவன் தன் பாத்தியதைகளின் காரணமாக அச்சொத்தைக் கைப்பற்றிக் கொண்டால் கிரயதாரின் கிரயத் தொகைக்குக் கார்டியன் ஜவாப்தாரியாவான்; கார்டியனுக்கு மைனர்கள் ஜவாப்தாரிகளாவார்கள். மைனர்கள் அல்லாத வேறு மேஜரானவாரிசுகளுமிருந்தால் அவர்கள் மைனர்களுக்கு ஜவாப்தாரிகளாவார்கள்.

மைனர் சொத்துக்குக் கார்டியனுக நியுமிக்கப்பட்டவன் கார்டியனுல் நியமித்தவனின் வசிய்யத்துக்களைத் தவிர, அவன் மையத்துக்குக் கபன், அடக்கம் முதலிய

செலவுகளை மாத்திரம் மையத்தின் தகுதிக்குத் தக்கவாறு அச்சொத்திலிருந்து செலவு செய்யவேண்டும். இவைகளைத் தவிர ஈசால் தவாபுக்காக பாத்திஹா முதலிய வேறு எந்தச் செலவையும் அச்சொத்திலிருந்து செய்யக்கூடாது. அவ்வாறு செய்தால், செலவுத் தொகைக்கு மைனர்களுக்கு, கார்டியன் ஜவாப்தாரி யாவான். கபன் துணிகளில் மையத்தின் தகுதிக்கு அதிக விலையுள்ள துணிகளை, அல்லது அளவுக்கு அதிகமாகத் துணிகளை வாங்கிக் கபனிடுவானுகில், அதிகக் கிரயத்திற்கு, அல்லது அளவுக்கதிகமான துணியின் கிரயத்திற்கு கார்டியன் ஜவாப்தாரியாவான்.

மைனர்களின் சொத்தை தன் சொந்தப் பிரயோஜனத்திற்காக மற்றவருக்கு கார்டியன் வாடகைக்குக் கொடுக்கக்கூடாது. அவ்வாறு கொடுத்த நிலைமையில் அச்சொத்து அழிந்துவிட்டால் கார்டியன் மைனருக்கு ஜவாப்தாரியாவான். ஆனுல், மைனருக்காக பிறருக்கு வாடகைக்குக் கொடுக்கலாம். இவ்வாறு கொடுக்கப்பட்ட நிலைமையில் அச்சொத்து அழிந்துபோனுல் கார்டியன் மைனர்களுக்கு ஜவாப்தாரியாகமாட்டான்.

மைனர்களின் சொத்துக்களை மற்றவர்களுக்கு கார்டியன் இரவலாகவோ, அல்லது கடனுகவோ கொடுக்கக்கூடாது; தானும் அவ்வாறு எடுத்துக்கொள்ளக்கூடாது.

தன்னுடைய மைனரான மகனுக்கு, கார்டியனு யிருக்கும் தகப்பன் மைனருடைய சொத்திலிருந்து, தான் கடனுகவும் அல்லது இரவலாகவும் அனுபவித்துக்கொள்ளலாம். மேலும், அவன் கார்டியனுக வேலை பார்த்ததற்குச் சம்பளமும் பெற்றுக்கொள்ளலாம்.



இறந்தவனுல் நியமிக்கப்பட்ட கார்டியன் சம்பளம் பெற்றுக்கொள்ளக்கூடாது. சம்பளமில்லாமல் கார்டியனுக இருக்க மறுப்பவர்களைச் சம்பளமில்லாமல் வேலைபார்க்கும்படி வற்புறுத்தவுங்கூடாது. ஆனுல், காஜி அவன் வேலையை மதித்து அவனுக்குச் சம்பளம் ஏற்படுத்தலாம்.

மைனரின் ஜங்கம சொத்துக்களைக் குறிப்பிட்ட தவணையின்பேரில் நஷ்டம் வராதவிதமாக கார்டியன் கடனுக்கு விற்பனை செய்யலாம். நஷ்டமாகக் கூடிய ஸ்திதியில் விற்றுல், நஷ்டத்திற்கு கார்டியன் பாத்தியப்படவேண்டும்.

இறந்துபோனவனுல் ஏற்படுத்தப்பட்ட கார்டியன் மைனரின் ஜங்கம சொத்தை தான் லாபகரமான விதத்தில் கிரயத்திற்கு எடுத்துக் கொள்ளலாம். மைனருக்கு நஷ்டமேற்படக் கூடியவிதமாக கிரயத்திற்கு எடுத்துக் கொண்டால், நஷ்டத்திற்கு அவன் பாத்தியமாவான். ஆனுல் கார்டியன் மைனரின் தகப்பனுக இருந்தால் சொற்ப நஷ்டத்திற்கு கிரயத்திற்கு எடுத்துக் கொள்ளலாம்.

மைனரான தன்னுடைய 2 மக்களுக்கு கார்டியனுக இருக்கும் தகப்பன் ஒரு மைனரின் ஜங்கம சொத்தை மற்றொரு மைனருக்கு கிரயம் செய்யலாம். அவ்வாறு கிரயம் செய்வதானுல் இரு மைனர்களுக்கும் 2 வக்கீல்களை ஏற்படுத்திக் கிரயம் செய்ய வேண்டும். தகப்பனல்லாதவன் கார்டியனுக இருந்து அவன் இவ்வாறு விற்பனை செய்தால் செல்லாது.

மைனரின் ஸ்தாவரச் சொத்துகளை அச்சொத்துக்கள் அழிந்துபோகும் அல்லது மதிப்புக் குறைந்துபோகும்

என்ற அச்சத்தை முன்னிட்டும் அச்சொத்திற்கு வரும்படி இல்லை யென்பதற்காகவும் கார்டியன் விற்பனை செய்யலாம். கடன், வஸிய்யத்து, அன்ன வஸ்திரம் ஆகியவைகளுக்காக வேறு ஜங்கம சொத்துகள் இல்லாதிருந்தால் ஸ்தாவரச் சொத்துகளை கார்டியன் விற்பனை செய்யலாம்.

இறந்து போனவன் தங்கம், வெள்ளி நாணயங்களை கொடுக்கும்படி வஸிய்யத்து செய்திருந்தால் அல்லது அவன் கடன் கொடுக்க வேண்டியதிருந்தால் அவைகளுக்கு தகுந்த அளவு சொத்தை கார்டியன் விற்பனை செய்யலாம்.

மைனருடைய சொத்தை கார்டியன் வியாபாரத்திற்காக விற்பதும் வாங்குவதும் கூடாது. மைனர்களுக்கு ரொக்கப் பணமிருந்தால் அதை வியாபாரம் செய்து விருத்திக்கு கொண்டு வரும்படி கார்டியனுக்கு காஜி உத்தரவு செய்யலாம். கார்டியன் மறுத்தால் அவனை கட்டாயப்படுத்தக் கூடாது.

மைனருடைய சொத்துக்கு அடியிற் கண்டவர்கள் முறையே அதிகாரிகளாவார்கள்:- இறந்து போனவனால் நியமிக்கப்பட்ட கார்டியன், இவ்வித கார்டியனால் நியமிக்கப்பட்ட கார்டியன், தகப்பன், தகப்பனின் தகப்பன், தகப்பனால் நியமிக்கப்பட்ட கார்டியன், காஜி, காஜியால் நியமிக்கப்பட்ட கார்டியன்.

கார்டியன் நியமித்து இறந்து போனவனுக்கு மைனர்களும், மேஜர்களுமான மக்கள் இருந்து மேஜரான மக்களிலொருவர் மைனரான மக்களை விட்டு இறந்து போனால் அம் மைனர்களின் சொத்துக்களுக்கும் மேற்கண்டவனே கார்டியனாக இருப்பான்.

முற்றிற்று.

---

Printed at The "Saiful Islam Press" G. T. Madras.

# நமது சொந்தப் பிரசுரங்கள்

## தமிழ் புத்தகங்கள்

| | ரூ. அ. பை. |
|---|---|
| இஸ்லாமும் உலகமும் | 0—12—0 |
| திரு குர்ஆனும் பிற மதத்தாரும் | 0—10—0 |
| திரு குர்ஆனும் ஐரோப்பியரும் | 0—4—0 |
| பர்தா பிரமாணங்கள் | 0—4—0 |
| காதியானிகளின் தவறான கொள்கைகள் (விளக்கும்) மௌலானா ஸெய்யித் அத்தா வுல்லா ஷாஹ் புகாரி வழக்கு | 0—8—0 |
| ஈமான் இஸ்லாம் | 0—2—0 |
| இந்திய முஸ்லிம் மன்னர்களின் ஆட்சி | 0—8—0 |
| ஹஜ் யாத்திரை | 0—6—0 |
| அயோத்திய குப்ரிஸ்தானில் ஒரு நற்பாக்கிய ஆத்மா | 1—0—0 |
| காபுலின் கன்னிகை | 0—10—0 |
| நோன்பின் மாட்சி | 0—2—0 |

## பள்ளிக்கூட பாட புத்தகங்கள்

[அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்டவை]

| | |
|---|---|
| நபிகள் திலகம் முதல் பாகம் | 0—4—0 |
| ,, இரண்டாம் பாகம் | 0—4—0 |
| ,, மூன்றாம் பாகம் | 0—5—0 |

[ வி. பி. தபால் செலவு வேறு ]

வெளி நாட்டினர் முன் பணமனுப்ப வேண்டும்.

மானேஜர் :

"ஸைபுல் இஸ்லாம்" புத்தகசாலை,

47, செம்புதாஸ் தெரு, சென்னை.

